# கலித்தொகை

**பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி**
**தமிழ்த்துறை**
**இலயோலா கல்லூரி, சென்னை**
Prof.donstony@gmail.com - 9944911404

---

9கண்டோர் கூற்று (வழியிற் கண்டோரின் கூற்று)

**பாடல் - 1 - தெளிவுரை**

**தாய் -** பெரும! எறிக்கும் வெயிலைத் தாங்கும் குடை பிடித்து, தொங்கும் கெண்டியும் முக்கோலும் தோளில் அசைய, இந்த வெம்மையான வழியில் வருகின்ற அந்தணரே! உமது கருத்திற்கு வேறாக ஒன்றை நினையாது, உமக்குப் பணி செய்யும். நீர்...... கோட்பாட்டின்படி வாழ்பவர்.

என் மகளும் இன்னொருத்தி மகனும், பிறர் அறியாமல் காதலிற்கூடி இவ்வழியில் உடன் செல்வதை நீர் காணவில்லையா?"

**கண்டோர் -** "காணாமல் இல்லை, கண்டோம். அது அறம் என்றே கருதி, எம் வழியே வருகின்றோம்.

நீர் அந்த அழகனோடு அரிய வழியில் நடக்கத் துணிந்த மங்கையின் தாய்போலும்!

மணப்பொருள் பலவும் கூட்டிய சந்தனம் பூசிக்கொள்வோர்க்குத்தான் இன்பம் அல்லாமல், அது மலையில் பிறந்ததால் மலைக்கு என்ன பயன்?

முத்து, மாலையாகக் கோத்து அணிபவர்க்குத்தான் இன்பம் அல்லாமல், அது கடலில் பிறந்ததால், கடலுக்கு என்ன பயன்?

யாழ் இசை, வாசிப்பவர்க்குத் தான் இன்பம்! அல்லாமல், அது யாழில் எழுந்ததால், யாழுக்கு என்ன பயன்?

இவற்றை எண்ணிப்பாரும். இவைபோல், உம் மகள் உமது வீட்டிலே தங்கியிராள்.

தனக்குச் சிறந்த உறவாகிய கணவனுக்குப் பணிவிடை செய்து சென்றாள். இல்லற நெறியிலிருந்து மாறாமல் இருப்பதற்கு வழியும் அதுதான். ஆதலால், மிக்க கற்பினை உடைய அவளுக்காக நீர் வருந்த வேண்டா.

## பாடல் - 2 விளக்கம்
## 11. தலைவி கூற்று

துறை விளக்கம்

- பொருள் சேர்ப்பதற்காகப் தலைவன் திட்டமிட்டான்.
- தலைவியிடம் செல்வமானது அறம், பொருள் இன்பம் மூன்றையும் தரும் என்று கூறித் தனது பிரிவையும் தெரியப்படுத்தினான்.
- மேலும் தான் செல்லும் வழியில் உள்ள காடு வெம்மையானது ஆயினும் சில நல்ல காட்சிகளும் அங்கு உண்டு. என்று கூறிச் சென்றான்.
- அவன் பிரிவால் தலைவி வருந்தியதைக் குறிப்பால் அறிந்த தோழியும் வருந்தினாள்.
- அப்பொழுது தலைவி "நீ வருந்தாதே! தலைவர் காட்டில் உள்ள நல்ல காட்சிகளை எடுத்துக் கூறினார்; அவற்றைப் பார்த்துவிட்டுத் திரும்பிவருவார் என்று கூறிச் சமாதானப்படுத்துகிறாள்.

## பாடல் - 2 - தெளிவுரை

- ஒளிவீசும் நகைகளை அணிந்தவளே!
- 'செல்வமானது

1. கருணை உடைய பெரியோர்களுக்கு, அவர்கள் விரும்பியவற்றைக் கொடுத்து, எளிதில் பெறமுடியாத அறத்தின் பயனை அடைவது,
2. பகைவரை அழித்துப் பகையைத் தீர்த்துக் கொள்ளுவது,
3. அன்போடு வாழ்ந்து இல்லற இன்பம் பெறுவது - என்ற மூன்று பயனையும் தரும்' என்று கூறித் தலைவர் அச் செல்வத்தைச் சேர்ப்பதற்காகப் பிரிந்து சென்றார்.

அவர் தொடர்ந்து செல்லாமல் திரும்பி வருவார் என்று தோன்றுகிறது. அதற்குக் காரணத்தை யான் கூறுகிறேன். கேள்!

தலைவர்..... "பாதம் தாங்க முடியாத வெம்மையை உடையது காடு" என்றார். ஆனால் உடனே, "அக்காட்டில் உடுக்கையைப் போன்ற அடியையுடைய யானைக்கன்று கலக்கிவிட்ட சிறிதளவு தண்ணீரை ஆண் யானை முதலில் தனது துணையாகிய பெண் யானையைக் குடிக்கச் செய்து, பிறகு தான் உண்ணும்" என்றும் கூறினார்.

- "காண்பவருக்கு இனிய காட்சி இன்றி, மரங்களின் இலைகளெல்லாம் தீந்து கிடக்கும் காடு நடப்பவருக்கு மிகவும் துன்பம் தரும்" என்று கூறினார். உடனே அக்காட்டில் அன்புக்குரிய பெண்புறா வெயிலால் வருந்திய களைப்பை ஆண்புறா தன்னுடைய சிறகை அசைத்து வீசுவதால் நீக்கும்" என்றும் கூறினார்.

- "மலையில் உள்ள மூங்கிலெல்லாம் வாடிப் போகும்படி வெயில் எறிப்பதால் காடானது நெருங்க முடியாத நிலையை" உடையது என்றார். உடனே அக்காட்டில் ஆண்மான், நிழல் கிடைக்காமல் வருந்திய பெண்மானைத் தனது நிழலில் நிற்கச் செய்து பாதுகாக்கும்" என்றும் கூறினார்.

- இத்தகைய நல்ல காட்சிகளை உடைய காட்டில் செல்பவர் நம்முடைய ஒப்பனையால் சிறந்த அழகு கெடும்படி நெடுநாள் பிரிந்திருக்கமாட்டார். (திரும்பி வருவார்). அதற்கு நல்ல அறிகுறியாகப் பல்லியும் வாய்ப்பான இடத்தில் நின்று சொல்லுகிறது. என்னுடைய இடக் கண்ணும் துடிக்கிறது.

## பாடல் - 3

## 18.தோழி கூற்று

### தெளிவுரை

- ஐய! நீ பொருள் தேடும் ஆசையால் உந்தப்பட்டுப் பிரிந்து வாழ நினைக்காதே!
- நீ தலைவியின் தோளில் அன்போடு எழுதிய தொய்யிலையும், நீ தழுவுதலால் அவள் மார்பில் பரவிய தேமலையும் நினைத்துப்பார்.
- பொருள்தேட எண்ணிப் பிரிகிறாய். நீ உடனே கொண்டு வருவதற்குப், பொருள் ஆயத்தமாகக் கிடக்காது. சில நாள் தங்கியே அதைச் சேர்க்க வேண்டும்.
- பொருளை முயன்று சேர்க்காதவர் எல்லாரும் பட்டினி கிடப்பதும் இல்லை.
- ஆகவே இளமையும், காதல் அன்பும் ஒருங்கே பெற்றவர்கள் விரும்பக்கூடிய தகுதி செல்வத்துக்கு இல்லை. நீங்கிவிட்ட இளமையை மீண்டும் பெற முடியாது.
- ஆகவே, வீட்டினுள் ஒரு கையால் ஒருவர் மற்றவரை அணைத்துக் கொண்டு, வெளியில் ஒரு கையால் ஓர் ஆடையை இரண்டாகப் பகுத்து உடுத்திக் கொள்ளும் வறுமை வாழ்க்கையை உடையவராயினும் வாழ்நாள் முடியும் வரை சேர்ந்து வாழும் காதலரின் வாழ்க்கையே உண்மையான வாழ்க்கையாகும்.